**இந்தியாவை ஜப்பானிய தொழில் தாது கோருது:**

தாது கோஷ்டியின் தலைவர் டாய்ஜோ, யந்திரங்களையும், தொழில் நுணுக்க உதவியையும் அளிப்பதாகவும் நதிதிட்டத்தை நிறைவேற்றித் தருவதாகவும், இத்திட்டத்தின் கீழ் ஜப்பான் 10 லட்சம் டன் இரும்புத் தாதுப் பொருள்களையும், நிலக்கரியையும் (கோக்) வாங்கிக் கொள்ளுமென்றும் கூறி இப்போது அமெரிக்காவிலிருந்து வாங்கும் இரும்பு தாதுப் பொருளுக்கு அதிக விலை கொடுக்கவேண்டும் என்று கூறினர் (21.3.52)

தென் ஆப்ரிக்கா: ஜோஹன்ஸ்பர்க் அருகே சமீபத்தில் சுதேசிகளிடையே கலவரம் சம்பந்தமாக 600 மேற்பட்டவர்கள் கைது செய்யப்பட்டனர். மலானின் பாஸ்போர்ட் நடவடிக்கைக்குச் சுப்ரீம் கோர்ட் விதித்த தடையாணை இக்கலகம் வந்து முடியுமோ என "மான்செஸ்டர் கார்டியன்" சந்தேகிக்கிறது. மலானின் இனபேத கொள்கையை ஆதரிப்பவர்கள்கூட அவர் அரசியல் சட்டத்தை மீறுவதை எதிர்ப்பர் என "நியூஸ் கிரானிகில்" கூறுகிறது. மொராக்கோ: ஸ்பெயினை தொடர்ந்து மொராக்கோவும் அரசியல் சீர்திருத்தம் கோரி பாரிஸ் ஜனாதிபதிக்கு அனுப்பியுள்ள செய்தியில் பிரெஞ்சு பாதுகாப்புப் பிரதேசம் என்ற அந்தஸ்து மாறவேண்டும், பாரிஸுடன் பேச்சுவார்த்தை நடத்துவதற்காக மொராக்கோவில் ஒரு சர்க்கார் அமைக்கவேண்டும், ஸ்பெயினுக்கு சுதந்திர அரசியல் வழங்கப்பட்டால் அவை மொராக்கோவுக்கும் வழங்கப்படவேண்டும். ★★

**என்-ஜி-ஓ. குழந்தைகளின் படிப்பு சலுகை:** 1ம் பாரம் முதல் மூன்றாவது பாரம் வரையில் சம்பளம் கிடையாது. 4-வது பாரம் முதல் 6வது பாரம் வரையில் அரைச் சம்பளம். ஏழை குடும்பங்களின் பளுவை கணிசமாகக் குறைக்கும். பெரிய குடும்பங்களுக்கு ஒரு நிரந்தர கவலை நீங்கும். குறிப்பு மேலும் இந்து ரூ பத்து பேரின் சம்பள உயர்வு அளித்தால்கூட இவ்வளவு அனுகூலம் கிடைக்காது. வாழ்க்கைச் செலவுக் குறியீட்டு எண்ணுக்கு ஏற்றபடி சம்பள உயர்வு பெற்றுவருபவர்களல்ல சர்க்கார் ஊழியர்கள். செலவு ரூ 30 லட்சம் இருக்கலாம். ★ கிழக்கத்தி நாடுகளின் 3 பிரிவுகள்: சமீபக்கிழக்கு, மத்தியக்கிழக்கு, கீழ்க்கோடி ஆகிய பிரதேசங்கள் எவை என்பதை தேசிய பூகோள சங்கம் விளக்கியுள்ளது. (1) கீழ்க்கோடி என்பது: சீனா, மங்கோலிய பிரதேசம், கொரியா, ஜப்பான், பிலிப்பைன், இந்தோ சீனா, தாய்லாந்து, பர்மா, மலேயா, இந்தோனேஷியா ஆகிய பதினொன்றும்; (2) மத்தியக் கிழக்கு என்பது: இந்தியா, பாகிஸ்தான், ஆப்கானிஸ்தான், நேபாளம், பூடான், ஸிக்கிம், இலங்கை ஆகிய ஏழும்; (3) சமீபக்கிழக்கு என்பது: துருக்கி, சைப்ரஸ், சிரியா, லெபனான், இஸ்ரேல், ஜோர்டான், எகிப்து, ஈராக், ஈரான், அரேபிய தீபகற்பத்திலுள்ள நாடுகளும் சேரும் ★★

**புது உணவு தானிய உத்தரவு:** (1) உணவு தானிய உத்தரவு மத்திய சர்க்காரால் வெளியிடப்பட்டன: (1) உணவு தானிய வியாபாரத்தில் ஈடுபட்டிருப்போர் அனைவரும் லைசென்ஸ் பெறவேண்டும் (2) அவசியம் என்று கருதும் பட்சத்தில் கையிருப்பு உள்ளோரிடமிருந்து தானியங்களைக் கோரப்பெற சர்க்காருக்கு அதிகாரமுண்டு. (3) அம்மாதிரி பெறும் தானியங்களுக்கு நியாயவிலை கொடுக்கப்படும் ★ 12.7.52 ★

[illegible] 22/7/52